

# புத்தா - ஆசியாவின் அறிவொளி

(படக்கதை)


எழுத்து & தொகுப்பு

அ.மணி மாறன்

# சுமார் ஆண்டு கி.மு. 500
















அது அவர் கர்ப்பவதியான
நாள்


கனவில் - ஒரு குட்டி யானை அவர் பக்கத்தில்
தோன்றியது...


மற்றும் அது தனது துதிகையால் அவரை
ஆசீர்வதித்து


பின்னர், அவரது வயிற்றின்
அருகே மறைந்தது


அவர் கனவு நிலையில்
இருந்து வெளியே வந்தார்


ராணி மாயா மரங்களுக்கிடையே இருந்தபோது, திடீரென்று
அவரின் மகபேறு வலி தொடங்க ஆரம்பித்தது

பின்னர், அறிவது என்னவென்றால், ஒரு மரம்,
அவரது அப்பெரிய முக்கிய
கணத்தை புரிந்து கொண்டு, மெதுவாக அதன்
கிளைகள் கீழே வளைத்து
கொடுத்து அவரை பாதுகாத்து ஆதரித்தது



ராணி பாடியபடி வலியில் பெருமூச்சு விட்டர்



அழுது கொண்டே எந்த வலியுமின்றி குழந்தை பிறந்தது.
பிரகாசிக்கும், தங்க தோல்லுடன் காட்சியளித்து

குழந்தை கண்கள் நன்கு திறந்த படி,
முழு நன்நினைவுடன் இருந்தது




அவரது முகம் சூரிய ஒளி போல்
பிரகாசித்தது






மேலும் கூறப்படுவது என்னவென்றால், தாமரை
மலர்கள் அவரது பாத சுவடுகள் வழியை
பூத்துகுலுங்க ஆரம்பித்தன




குழந்தையின் தந்தை மாமன்னர் சுத்தொதனா அக்குழந்தைக்கு சித்தார்த்தா என பெயரிட்டார் அப்படி என்றால், நன்மையை கொண்டு வருபவர்' என்று பொருள்


பாரம்பரிய இந்திய இசைகள் அம்மகிழ்சியான தருணத்தில் இசைக்கப்பட்டன




பின்னர் மாமன்னர், அவர் மக்களுக்கு அவரது மகனை அறிமுகபடுத்த ஒரு சிறந்த வரவேற்பைக் கொடுத்தார்




திடீரென்று, விழாவின் மத்தியில் எல்லோருக்கும் ஆச்சரியம், எதிர்பாராத விருந்தாளி ஒருவர் வந்தார்


அவரை யாரும் பல ஆண்டுகளாக பார்த்ததேயில்லை. அவர் மதிப்பிற்குரிய தபசி மற்றும் ஜோதிடர் அசிடா ஆவார்


அசிடா அவரகளது மகனை பார்த்தார். அப்போது ராணி மாயா அவரின் கண்களில் கண்ணீரை பார்த்தார்


ராணி மாயாவின் முகம் முழுமையாக வியத்தகு துக்கத்திற்குள்ளானது


ஓ ராணி, பயபட தேவையில்லை


உனது மகனின் போதனைகளை கற்றுக்கொள்ள நீண்ட போதுமான வாழ நாள் இல்லையே என்ற வருத்தத்தில் வரும் ஒரு முதியவரின் கண்ணீரே தவிர வேர்ரொன்றும் இல்லை


பிற்காலத்தில் எனது மகன் ஒரு பெரிய ராஜாவாக திகழ்வாரா?


அவர் உலகிற்கே ஆசானாக விளங்குவார் அல்லது அதன் மீட்பராக திகழ்வார்


சித்தார்த்தா வளர்ந்த பின், விரும்பினால் உங்களை போன்ற ஆசானாகளாம். ஆனால் முதலில் அவன் என்னை பின்பற்றி ஒரு ராஜாவாக திகழ வேண்டும்


உங்கள் விருப்பம் அதுவாக இருக்கலாம், ஆனால் தெய்வங்களை சில நேரங்களில் சாதரண மனிதனின் விருப்பத்திற்கு இணங்கமாடார்கள்


இவன் எனது எதிர்காலத்து அரசன்... இவன் எனது எதிர்காலத்து ராஜா!


அங்கு வந்த அணைவரும் உற்சாக மகிழ்ச்சியில் ஆழ்ந்தனர்
எதிர்காலத்தின் மிகபெரிய ராஜா வாழ்க!


மகிழ்ச்சியான விழா எனினும்
முடிந்துவிட்டது


தனது மகனின் விதி இலக்கு
நிறைவேறும் வரை தான் வாழ
மாட்டோம் என்ற ஒரு
விசித்திரமான அச்சத்துடனும்
நிரப்பப்பட்டு, ராணி மாயா
காணபட்டார்


ஒரு வாரம் கழித்து அவர் ஒரு பயங்கரமான நோயால் இறந்தார்...


அவர் ஒரு நட்சத்திரமாக மாறி வானத்தில்
சென்று "துசிடா" சொர்கத்தில் தேவதையாக
மறுபிறப்பு எடுத்தார்


அது உண்மையில் மாமன்னர் சுத்தொதனாவுக்கு
ஒரு தீரா வருத்தத்தை ஏற்படுத்தியது


மாமன்னர் சுத்தொதனாவுக்கு பின்னர் தனது மகன்
சித்தார்த்தாவை பார்த்துக்கொள்ள, அவனது சித்தி
மகா பஜபதியை நியமித்தார்


அதனைத் தொடர்ந்து, மாமன்னர்
சுத்தொதனா அவரை ராணி நிலைக்கு
உயர்த்தினார்


ராணி மகா பஜபதிக்கு சொந்த மகன்
மற்றும் மகள் பிறந்தன


இருந்தும் அவர் இளவரசர்
சித்தார்த்தாவை தனது
சொந்த மகனை போல
நேசித்தார்


நாட்கள் ஒருண்டோடின


குழந்தை இளவரசர் சித்தார்த்தா இளம் பருவ
இளவரசர் சித்தார்த்தாவாக மாறினார்


அவர் அழகான இளவரசி
யசோதராவை திருமணம் முடித்தார்


ஒரு குறுகிய காலத்தில், அவர் புகழ்பெற்ற
ஆசான் விஸ்வாமித்ரா மூலம்
அனைத்து பதினெட்டுக் கலைகளின்
திறமைகளையும் கற்றுணர்ந்தார்


அவர் ஒரு பெரிய குதிரை ஏற்றகாரரும், ஒரு பெரிய வில்லாளனாகவும் மாறினார், மற்றும் அவர்
பெரும்பாலும் அவரது நண்பர்களுடன் பண்டைய விளையாட்டான கபடியை விளையாடி மகிழ்ந்தார்


மாமன்னர் அவரது மகன் இளவரசர்
சித்தார்த்தாவின் அதிசயமான
நடவடிக்கைகளை பார்த்து ஆச்சரியபட்டார்


மேலும் அவர் முனிவர், ஜோதிடர் அசிடா
கூறிய வார்த்தைகளை நினைவுகூர்ந்தார்


குளிர் காலத்தில் ஒன்று, கோடை காலத்தில் ஒன்று, மழை பருவ காலத்தில் ஒன்று என - மாமன்னர் சுத்தோதனா சித்தார்த்தாவுக்கு மூன்று அரண்மனைகள் கொடுத்தார்


மேலும் அவர் மூன்று தாமரை குளங்களை கொடுத்தார்
ஒன்றில் செந்தாமரை மலர்கள் பூத்துக் குளிங்கின


ஒன்றில் வெண்தாமரை மலர்கள் பூத்துக் குளிங்கின


மற்றொன்றில் நீல தாமரை மலர்கள் பூத்துக் குளிங்கின


இப்படியாக மாமன்னர் சுத்தோதனா அவரது மகனை வலி மற்றும் கவலை என்ற அனைத்தில் இருந்தும் காப்பாற்ற நினைத்தார்

ஆனால் பின்னர், ஒரு நாள், சித்தார்த்தா உயிரோட்டமும் அழகும் நிறைந்த ஒரு மர்மமான பாடல் அவர் காதுகளில் ஒலிக்க கேட்டார்



முதலில் அவர் அப்பாடல் எங்கிருந்து வந்தது என்று புரிந்து கொள்ள முடியவில்லை



அப்பாடல் அவர் முன்னர் கேட்டிலா ஒரு மொழியில் இருந்தது









யசோதரா மழலை பருவ மாறா நினைவலைகளான அழகிய நாட்டின் மலை, ஏரிகளைகள்  அது நினைவூட்டியது




எவ்வளவு விசித்திரமானது. அதுபோன்ற அழகான இடங்கள் உண்மையில் இங்கே உள்ளனவா?


துன்பம் மட்டுமே இந்த சுவர்களுக்கு அப்பால் உள்ளது என்று நான் கேள்விப்பட்டுள்ளேன்


"துன்பம்" - அப்படி என்றால் என்ன?


உன் தந்தை உன்னை மிகவும் நேசிக்கிறார். அவர் நமக்கு தேவையான எல்லாவற்றையும் கொடுத்திருக்கிறார். இத்தனை அழகு நம்மை சுற்றி உள்ள போது நீங்கள் இதை விடுத்து வேறு எங்கும் செல்ல தேவை இல்லை


நீ சொல்வது உண்மை; நமக்கு தேவையான் எல்லாம் நன்றாக இங்கு உள்ளது. இருந்தும் இந்த உணர்வை நான் என்னவென்று எண்ணுவது?


உலகம் மிக அழகாக இருக்கிறது என்றால், நான் ஏன் இதுவரை அதை பார்த்ததில்லை? நான் என் சொந்த நட்டையே பார்த்திறேன்! நான், எனது சொந்த கண்களால் இந்த உலகை பார்க்க வேண்டும் யசோதரா!

இதை அறிந்த அவரது தந்தை ரகசியமாக
முன்கூட்டியே எல்லாவற்றையும் சரியாக
இருக்கும் படி தயார் செய்தார், மிகவும் முக்கியமாக
சித்தார்த்தாவை வருத்தத்திற்கும், தொந்தரவுக்கும்
உள்ளக்கும் விஷயங்களை களைந்தார்




தேர் அரண்மனை வாயிலை கடந்து சென்றது -
"எல்லோரும் இளமையாகவும், ஆரோக்கியமான
காட்சியளித்தனர்" அப்போது அவருக்கு வயது 29








திடீரென்று, கூட்டத்தின் இடையே, இளம் இளவரசர் சித்தார்த்தா அவர் முன் பார்த்திராத ஒரு காட்சியை பார்த்தார்

















முதுமை என்றால் என்ன?


முதுமை, நினைவை அழித்து, அழகு மற்றும் வலிமையை அழிக்கிறது. இறுதியில் இது எல்லோருக்கும் சம்பவிக்கும், என் ஆண்டவரே


எல்லோருக்குமா? உனக்கும் எனக்கும் கூடவா?


இது போன்ற விஷயங்களை உங்களுடன் தொடர்பு படித்திக்கொள்வது நல்லது அல்ல, என் ஆண்டவரே


சான்னாவின் வளிலியுறுத்தலுடன் தேர் சற்று தூரம் முன்னேறியது


சான்னா, தேரை நிறுத்து, அந்த மனிதனுக்கு என்ன நேர்ந்தது?


ஏன் அவர் அப்படி அழுகிறார்?




அவர் நோய்வாய்ப்பட்டு. வலியால் அழுகிறார். என் ஆண்டவரே


நோய்வாய்ப்பட்டா? என்ன அது?


எவரும் குறைந்தது ஒரு முறையவது நோய்வாய்ப்படமல் மரணத்தை அடையமாட்டார்கள்


மன்னர்கள் கூடவா?


மரணம் - என்ன கணம் அது? அதை எனக்கு காட்டு


இது தான் மரணம், என் ஆண்டவரே




இல்லை, என் ஆண்டவரே, நீங்கள் அங்கு செல்ல கூடாது! தயவு செய்து! நீங்கள் அங்கு செல்ல வேண்டாம்! இல்லை, என் ஆண்டவரே! என் ஆண்டவரே! என் ஆண்டவா சித்தார்த்தா!


சான்னா இளவரசர் சித்தார்த்தாவின் பின்னே ஓடினான்


இங்கே இறந்த மனிதனின் சாம்பல் நதியில் கரைக்கபடுகிறது, என் ஆண்டவரே மரணம் ஒவ்வொரு குடும்பத்தில் உள்ள ஒவ்வொரு நபருக்கும் ஏற்படும். உடல் குளிர்ந்து மரம் போன்று கடினமாக மாறும் போது, அது மரம் போல எரிக்கபடுகிறது


அந்நாளே, அத்தீயின் இருந்து, அம்மக்களின் துன்ப நிலையை பற்றி சித்தார்த்தா நன்கு கற்று கற்றுக்கொண்டார் மற்றும் அவர்கள்ர்ன் முலம் இரக்கத்தை கண்டுக்கொண்டார்


அவர் தன்னை அம்மக்களாகவும், அம்மக்களை தாமாகவும் கருத்தினார்


தேர் இளவரசர் சித்தார்த்தாவுடன் அரண்மனைக்கு பின்திரும்பியது


என் மதிப்பிற்குறிய தந்தையே, என்னை ஏன் இவ்வளவு காலமாக உண்மை நிலையில் இருந்து மறைத்து வைத்திருந்திற்கள்?




ஏன் என்னிடம் துன்பம், நோய், வறுமை, முதுமை மற்றும் இறப்பு இருப்பதை மறைத்து பொய் உரைத்திர்கள்?
சித்தார்த்தா நான் உன்னிடம் பொய் உரைத்தேன் என்றால் நான் உன்னிடம் அளவுக்கடந்த அன்பு வைத்திருக்கிறேன்


உங்கள் அன்பு எனக்கு ஒரு சிறையாகி விட்டது


வெளியே பலர் பாதிக்கப்பட்டு துன்பப்படும் போது, என்னால் எப்படி இங்கே பழயபடி மகிழ்ச்சியாக வாழ முடியும்?
நீ என்றும் வெளியே செல்ல வேண்டிய அவசியம் இல்லை என் மகனே


தந்தையே நான் துன்பத்திற்கு ஒரு முடிவு கண்டுபிடிக்க வேண்டும்


நீ என்னைக் ஏமாற்றி வெளியே நினைத்தாலும், உன் மனைவி மற்று சொந்த மகனை விட்டு எப்படி செல்வாய் சித்தார்த்தா?


என்ன என் ... குழந்தையா?


ஆம் இம்மாலை பொழுது பிறந்தது சித்தார்த்தா. அவர்களை நினைத்து பார்


இப்போது நீயும் ஒரு தந்தை. உனக்கென்று சில கடமைகள் இருக்கிறது. இப்போது உன்னால் இங்கிருந்து போக முடியாது


என் மனைவி யசோதரா... மற்றும் எனது மகன்.. மீது அன்பு இருந்தும் என்னுள் உணர்கின்ற வலியை நீக்க முடியவில்லையே


நான் அறிந்த வரை அவர்களும் கஷ்டப்பட்டு, துன்பப்பட்டு முதுமையை அடைந்து மரணத்தை சந்திப்பர், உங்களையும் என்னையும் மற்றவர்களையும் போன்று
ஆம். நாம் அனைவரும் இறக்க வேண்டும் ... மற்றும் மீண்டும் பிறக்க வேண்டும் ... மீண்டும் இறக்க, மற்றும் மீண்டும் பிறக்க மற்றும் இறக்க வேண்டும், மற்றும் மீண்டும் பிறக்க வேண்டும் மற்றும் மீண்டும் இறக்க வேண்டும். ஒருக்காலும் ஒருவனும் அந்த சாபத்தில் இருந்து தப்பிக்க முடியாது


அப்படி என்றால் அந்த சாபத்தை நிக்குவதே எனது கடமையாகும்


வாயில் கதவுகளை பூட்டுங்கள், பாதுகாப்பு பணியாளர்களை இரடிப்பாக்குங்கள் இளவரசர் சித்தார்த்தா அரண்மணையை விட்டு தப்பிக்க முயற்சித்தால், பலவந்தமாக தடுத்து நிறுத்துங்கள்


சித்தார்த்தா தனது தந்தையிடமிருந்து விடைபெற்ற மறுகணமே
அவரது மனைவி, அவரின் அந்நாளில் பிறந்த மகனை பார்க்க
சென்றார் மற்றும் அக்குழந்தையை அவர் இராகுலா என்று
அழைத்தார். அப்படி என்றால் விலங்கிடபட்டவர் என்று பொருள்




அவரது மனம் வலித்தது. இருந்தும் அவரது ஆழ்ந்த சிந்தனை
தெளிவாக இருந்தது


ஒரு மாய மூடுபனி எல்லாயிடங்களையும்,
எல்லாவற்றையும் சூந்தது


முழு அரண்மனையே ஒரு ஆழ்ந்த உறக்கத்தில்
இருந்தது




சான்னா.
சான்னா.
சான்னா.


எழுந்திரு. கண்டகாவை கொண்டுவா
என்ன?


கண்டகாவை கொண்டுவா. யாரும் உன்னை பார்காதவாறு அரண்மணையின் பழைய வாயில் கதவுக்கு கண்டகாவுடன் வந்து என்னை சந்தி. இப்போதே போ
சரி என் ஆண்டவரே


பெரிய யானைகள் மட்டுமே விழித்திருக்கின்றன. என் ஆண்டவரே
சான்னா இளவரசர் சித்தார்த்தாவின் நல்குதிரையான கண்டகாவை கொண்டு வந்தான்


உலகமே கனவில் மூழ்கியுள்ளது. சான்னா
ஆனால் சித்தார்த்தாவின் கனவு முடிவுக்கு வந்தது. அவர் விழித்துக்கொள்வதற்கான நீண்ட பயணம் தொடங்கியது


ஆசை மற்றும் இச்சையின் கடவுள் மாரா தோன்றினார்


ஆடம்பரம் மற்றும் பேரானந்தமான வாழ்க்கையை நீங்கள் இந்த அரண்மனையின் உள்ளே அனுபவித்திர்கள்


ஏழே நாட்களுக்குள் நீங்கள் இந்த பயணத்தை தொடங்கிய இடத்திற்கே திரும்புவிர்கள்


நான் மறுபிறப்பு, முதுமை, நோய் மற்றும் இறப்பு இவற்றின் சுழற்சியை அறியாமல் இங்கு திரும்ப போவதில்லை


எனக்கு தடையாக தயவு செய்து நிற்காதிர்கள்


மாரா, உடனடி அவ்விடத்தைவிட்டு மறைந்துவிட்டார்


சான்னா அவர்கள் யார்? அவர்கள் கொள்ளையர்களா?


இல்லை, என் ஆண்டவரே. அவர்கள் துறவிகள்
துறவியா? ஏன் அவர்கள் மிகவும் மெலிந்து நிர்வாணமாக காணப்படுகின்றனர்?


அவர்கள் வாழ்வின் அனைத்து சுகங்களையும், வசதிகளையும் துறந்தவர்கள், என் ஆண்டவரே. அவர்கள் ஞான அறிவொளியை அடையும் வரை இக்காட்டை விட்டு ஒருபோதும் செல்லமட்டார்கள்


ஞான அறிவொளி?


இவைகள் உனக்காக சான்னா
அவர் தனது அனைத்து விலை மதிப்புமிக்க ஆடை, ஆபரணங்களை கொடுத்தார்


அவர் தனது முடிகளை வெட்டினார்


நான் எல்லோருக்காகவும் இதை செய்கிறேன். நான் உண்மையான சுதந்திரத்தை தேடிக்கொண்டிருக்கிறேன்




சான்னா இளவரசர் சித்தார்த்தாவை அங்கே விட்டு விட்டு சோகமாக அரண்மனைக்கு திரும்பினான்


விரைவிலேயே குதிரை கன்டகா அதன் இளவரசர் சித்தார்த்தா பிறிந்த துயரத்தில் மனம் வாடி மாண்டது


அதுவும் "தவடிம்ஸா" சொர்கத்தில் தேவதையாக மறுபிறப்பு எடுத்தது


ஞான அறிவொளிக்கான தேடுதல் வேட்டை இங்கே ஆரம்பபித்தது

வானத்தில் இருந்து உரத்த இடிமுழக்கத்துடன் மழை பொழிய தொடங்கியது

சித்தார்த்தா மரத்தின் அடியில் அசைவில்லாமல் அமர்ந்து கொண்டிருந்தார்

அப்போது ஒரு ஐந்து தலை நாகம் வந்து
இளவரசர் சித்தார்த்தாவுக்கு
குடைப்போல தனது தலையை
படமெடுத்துக்கொண்டு அவர் பின் நின்றது










ஐந்து துறவிகள் தங்கள் சொந்த கண்களால் இந்த அதிசயத்தை பார்த்தனர்


இந்த அற்புத அதிசயத்தை கண்ட ஐந்து துறவிகள் ஆச்சர்யத்தில் திகைத்தனர்


அவர்கள் சித்தார்த்தாவின் முதல் சீடர்களாக மாறினர்


ஆறு ஆண்டுகளாக, சித்தார்த்தா மற்றும் அவரது சீடர்கள் அமைதியாக காட்டில் துறவற வாழ்கை வாழ்ந்தனர்


குடிபதற்கு, அவர்கள் மழை நீரையும், உணபதற்கு அவர்கள் அரிசி, தானியம் அல்லது மண் சேற்று குழம்பு, கடந்து செல்லும் பறவையின் எச்சம் அகியவற்றை பயன்படுத்தினர்
தங்கள் உடலை மறந்து துன்பத்தின் ஆசானாக விளங்க தங்கள் மனதை பக்குவப்படுதிக்கொண்டிருந்தனர்



பிறகு, ஒரு நாள் சித்தார்த்தாவின் காதுகளுக்கு, ஒரு படகில் கடந்து சென்றுக்கொண்டிருக்கும் முதிய இசைக்கலைஞர் ஒருவர் தனது மாணவகளிடம் பேசுவது கேட்டது
நீங்கள் சரத்தை மிகவும் இறுக்கினால், அது ஒடைந்துபோகும். அதேப்போல் அதை மிக மந்த இலகிய தன்மையுடன் வைத்திருந்தால், அதிலிருந்து இசை மீட்க முடியாது




திடீரென்று, அந்த எளிய வார்த்தைகள் சித்தார்த்தாவுக்கு ஒரு பெரிய உண்மையை உணர்தியது மற்றும் அவர் இவ்வளவு காலமாக தவறான பாதையை பின்பற்றிக்கொண்டிருப்பதை உணர்ந்தியது
நீங்கள் சரத்தை மிகவும் இறுக்கினால், அது ஒடைந்துபோகும். அதேப்போல் அதை மிக மந்த இலகிய தன்மையுடன் வைத்திருந்தால், அதிலிருந்து இசை மீட்க முடியாது




கிராமத்துப் பெண் சிறுமி ஒருவர் சித்தார்த்தாவுக்கு கிண்ணம் நிறைய அரிசி சாதத்தை வழங்கினார்








முதல் முறையாக பல ஆண்டுகள் கழித்து, அவர் நல்ல உணவை ருசித்தார்


ஆங்கு வந்த மற்ற துறவிகள், தங்களது ஆசான் சாதாரண மனிதனை போல் குளிப்பதையும், சாப்பிடுவதையும் கண்டு, சித்தார்த்தா ஞான அறிவொளிக்கான பெரும் தேடலை விடுத்து தங்களையும் ஏமாற்றிவிட்டார் என்று எண்ணினர்


வாருங்கள் ...
என்னோடு சேர்ந்து
சாப்பிடுங்கள்


நீங்கள் உங்களது சத்தியத்தை மறந்து எங்களை ஏமாற்றிவிட்டீர்கள் சித்தார்த்தா. உங்களின் உயரிய தேடலையும் விடுட்டு விட்டீர்கள். எனவே இனி நாங்கள் உங்களை பின்பற்ற முடியாது
கற்பதே மாற்றதை அடையதான். ஞான அறிவொளிக்கான பாதை, இடைப்பட்ட பாதை
இனி நாங்கள் உங்களிடம் இருந்து எதையும் கற்று கொள்ளவும் முடியாது


அது அனைத்து இரட்டை எதிர் மறை காரணிகளுக்கு இடையே உள்ள ஒரு மெல்லிய பாதை
அவர்கள் சித்தார்த்தாவின் எண்ணத்தை கண்டுக்கொள்ளாமல் அவரை விட்டு சென்றனர்


நான் உண்மையிலேயே ஞான அறிவொளியை அடைந்தேன் என்றால், இந்த கிண்ணம் ஆற்றோற்றத்தின் எதிர் திசையில் மிதக்கட்டும்


கிண்ணம் ஆற்றோற்றத்தின்
எதிர் திசையில் மிதந்தது


இடைப்பட்ட பாதை - அதுவே சித்தார்த்தா கண்ட மாபெரும் உண்மை,
அதுவே அவர் இவ்வுலகிற்கு கற்பிக்க வேண்டிய ஒன்றாகும்


பொத்காயா, அது நகருக்கு வெளியே உள்ள ஒரு சிறிய கிராமம்


சித்தார்த்தா அங்கு இருந்த ஒரு
பெரிய மரத்தின் கீழ் அமர்ந்து,
அவர் கண்ட இடைப்பட்ட
பாதையின் மூலம் தனது உடல்,
மனம் இரண்டையும்
செம்மைப்படுத்தினார்




சித்தார்த்தா போதி மரத்தின் அடியில் ஞான அறிவொளியை
அடைந்தார், அது ஒரு அத்திமரம் - பீக்கஸ் ரிலிஜியோசா


சிறிதுக்காலத்திற்கு பிற்கு அங்கு ஐந்து பெண்கள் தோன்றினார். அவர்கள் அப்பாவி கிராம பெண்கள் போல காட்சியளித்தனர், ஆனால் உண்மையில் அவர்கள் மாரா, இருள் அரசனின் ஐந்து மகள்கள்


அவர்கள் தற்பெருமை, பேராசை, பயம், அறியாமை மற்றும் ஆசை ஆகியவற்றின் ஆத்மாவாக விளங்கினர்


மாரா அவர்களை அனுப்பியது சித்தார்த்தாவை மயக்கி அவரது தேடலை தடுக்கவே


அவர்கள், ஆடிப்பாடி சிரித்து அரட்டையடித்தனர்


மாரா சாதாரண மனிதனின் உருவில் வந்து சித்தார்த்தாவை மயக்கி சாதாரண வாழ்க்கை நெறிக்கு மாற்ற திறமையான முயற்சிகளை செய்தார்
ஆனால் சித்தார்த்தா எல்லாவற்றிற்கும் அப்பால் உள்ள வடிவத்தை கண்டார்


அவரது தனது கைகள் உயர்த்த


அனைவரும் தங்கள் எதிர்காலத்தை நோக்கி சிதய தொடங்கினர்








அப்போது மாராவின் கோபம் பல் மடங்கு பெருகியது

மாரா தோற்கடிக்கப்பட்டதாக தோன்றியது. இருந்தும் அவர் தனது போராட போரை கைவிட்டுவிடவில்லை

இப்போது அவர் மீண்டும் தாக்க தயாரானார்

அவரது மாயப்போர் விரர்களுடன்






அவர்கள் தீ அம்புகளை சித்தார்த்தாவை நோக்கி மழையாக பொழிந்தனர்


தீ அம்புகள் மரதின் கீழ் பகுதியை அடையும் போது, அது மலர் மழையாக மாறி பொழிந்தது




நீங்கள் வேறு யாரும் அடைய முடியாத இடத்தை அடைந்து விட்டிர்கள், நீங்களே எனது கடவள்?
என்னை கட்டமைத்தவரே, இறுதியாக நான் உங்களை சந்தித்துவிட்டேன். நீங்கள் உங்கள் இல்ல கட்டை மீண்டும் கட்ட முடியாது


அவர் மாராவை எதிர்கொண்ட போது, தன்னையே எதிர்கொண்டார்
ஆனால் நானே உனது இல்ல கட்டு. நீ என்னுள் வாழ்கிறாய்
எனது சொந்த வெறுப்புக்களின் ஆண்டவரே, நீ ஒரு தூய மாயை. நீர் என்னுள் நிலைக்கொண்டவன் அல்ல


இந்த பூமியே எனக்குச் சாட்சி


அவர் கீழே தனது கையை நீட்டி தரையை தொட்டார்


அப்போது இந்த ஒட்டு மொத்த பூமியையும் நடுநடுங்கியது


மாராவும் அவரது மாயப்போர் வீரர்களும் தப்பி காற்றோடு காற்றாக மறைந்தனர்
சித்தார்த்தா அவரது அன்பு, பெருங்கருணை இரக்கத்தின் மூலம், மாராவின் போராட்டப்போரை எதிர்த்து வெற்றியும் பெற்றார்





அவர் மிகுந்த அமைதி அடைந்தார், மாயை பிரமைகள் மீதுள்ள பற்றை விடுத்தார்

அவர் அவருக்கே அப்பார்ப்பட்டவர்ரானார், இன்ப நிலை மற்றும் துன்ப நிலைகளுக்கு அப்பார்ப்பட்டவர்ரானார், அவர் தன்னை தீர்ப்புகளிலிருந்து விலக்கி அதற்கும் அப்பார்ப்பட்டவர்ரானார்



அவர் முப்பிறவியில் பூனை, சுட்டி எலி, மரம், யானை போன்றவையாக பிறந்ததை நினைவு கூர்ந்தார்





அவர் தனது முதல் பிறப்பு முதல் தனது பல்லாயிரக் கணக்கான பிறவிகளை காணலானார், பின்னர் அவர் பிரபஞ்சத்தையும் தாண்டி பார்க்கலானார்







சித்தார்த்தா அனைத்திலும் உள்ள மெய்ப்பொருளைப் பார்த்தார்



அவர் இந்த பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு இயக்கத்தின் காரணம், தூண்டலின் விளைவே என புரிந்துக் கொண்டார்



அவர் எல்லா உயிர்களின் இரட்சிப்பு, கருணை இல்லாமல் இல்லை என உணர்ந்தார்



அத்தருணத்தில் இருந்து, சித்தார்த்தா புத்தர் என அழைக்கப்பட்டார், ஒரு விழித்தெழுந்த நிலை எனபட்டது






பல வாரங்களுக்கு, புத்தர் போதி மரத்தின் அடியில் மிக அமைதியாக அமர்ந்திருந்தார்


அவர் தனது ஆழமான தனிமை நிலையிலிருந்து ஓய்வுபெற ஆசை விழைந்தது
ஆனால் அவரின் மனம் அங்கேயே இருக்க வேண்டும் என்று எண்ணியது. அவர் மிகவும் சந்தோஷமாக இருந்தார். அங்கிருந்து எங்கும் செல்ல விரும்பாதவராக இருந்தார்


மற்றவர்களுக்கு கற்பிக்க முயற்சிக்கும் முன்னர், மாறாக தான் தன்னை கண்டறியவே ஆறு நீண்ட ஆண்டுகள் எடுத்துக்கொண்டதை அவர் நினைவுக்கூர்ந்தார்
யாரும் இதை புரிந்துக்கொள்ள போவதில்லை. உங்களுக்கு தெரியுமா, நான் அறிந்ததை கூறினால் மக்கள் என்னை பித்தன் என நினைப்பார்கள்


மக்களின் இயல்பு மன நிலையான, பொறாமை, வயிற்றெரிச்சல் மற்றும் வலுவான எதிர்மறை எண்ணங்களை புத்தர் நன்கு புரிந்துக்கொண்டிருந்தார்
உலகில் உள்ள அனைத்து மக்களும், ஆழ் கிணற்றில் நீந்தும் மீன்களை போன்றவர்கள்


எனவே புத்தர், மக்களுக்கு கற்பிக்க தன்னே பயந்தார்


மேலும் அறியப்படுவது என்னவென்றால், புராண கடவுளான பிரம்மா புத்தரிடம் வந்தார்


முழங்காலிட்டு அவர் முன் அமர்ந்தார்


தயவு செய்து, நீங்கள் அறிந்து, புரிந்து உணர்ந்ததை மற்றவர்களுக்கும் கூற வேண்டும் - ஏன்னென்றால் இவ்வுலகிற்கு அது தேவை, உலகின் விருப்பமும், தெய்வங்களின் விருப்பமும், மக்களின் விருப்பமும், தேவையும் அதுவே


பின்னர் புத்தர் பிறருக்கு போதிக்க முடிவு செய்தார் ஏனெனில் அவரது பெரும் கருணையும் இரக்கமும் ஈடு இணையற்றது


அவரது கருணையும் இரக்கமும் சாதாரண ஒன்றல்ல


புராண கடவுள் பிரம்மாவும்,
தேவர்களும் வானத்தில் சென்று
மறைந்துவிட்டனர்




35 வயது, புத்தர் உலகிற்கு தனது போதனையான தர்மமா -
எல்லாவற்றின் அடிப்படை விதிகளை தனது வாழ்நாள் முழுவதும்
போதிக்களானார்


இருந்தும் அவர் மனதில் அது
எளிதல்ல என்ற அச்சம் நிலவியது


அவர் அறிந்ததை பகிர்ந்துக்கொள்ள நினைக்கும் போது, அங்கு
திரிந்துக்கொண்டிருக்கும் ஒரு துறவியை சந்தித்தார்


நான் தங்களது குரு யார் என்று அறியலாமா?


எனக்கு எவ்வித குருவும் இல்லை, நான் என் ஞான அறிவொளியை நானாகவே பெற்றேன்




ஓ அப்படியா, அப்படியென்றால் நான் விடைப்பெற்று செல்கிறேன்
துறவி அங்கிருந்து சென்று விட்டார்


போதிக்க நினைக்கும் புத்தரது முதல் முயற்சி தோல்வியே


புத்தர் என்னத்தான் ஞான அறிவொளியின் மூலம் விழித்திருந்தாலும் அவரது தோற்றம் மற்றவர்களை போல சாதாரணமாக எந்த சிறப்புமின்றியே காட்சியளித்தது
ஏன்னெனில் அவர் எப்போதும் ஒரு சாதாரண மனிதர்


பொத்காயாவில் இருந்து, புத்தர் மேற்கை நோக்கி கிட்டத்தட்ட
200 மைல்கள் நடந்து கங்கை ஆற்றைக்கடந்தார்


இன்னும் அவர் கண்ட ஞான அறிவொளியை
மற்றவர்களுக்கு விளக்கி போதிக்க
அஞ்சப்படுபவராகவே இருந்தார்


ஏன்னேனில் அவருக்கு
ஏற்கனவே அதில்
தன்னனுபவம் உண்டு


கங்கை நதியிக்கு அருகில் உள்ள மான் பூங்கா,
சார்நாத்தில் மீண்டும் போதிக்க அவர் முயற்சி செய்தார்

அவரது முதல் ஐந்து சீடர்களாக போகும் துறவிகள் அங்கு தவம் மேற்கொண்டிருந்தனர். இருந்தும் அதைக்கண்டுக்கொள்ளாமல் விலகிச்செல்ல நினைத்தார்



வெகு தொலைவில் புத்தர் வருவதை அவர்கள் பார்த்தனர். கண்டவுடனே அவர்களுக்கிடையே ஒருவரோடொருவர் உடன்படிக்கை செய்துக்கொண்டனர்



நண்பர்களே, இதோ சித்தார்த்தா, ஆடம்பரமாக வாழுந்தும், துறவியாக துன்பப்பட்டவனும் வந்துள்ளேன். யாரும் எனக்கு கீழ் அடிப்பணிய தேவை இல்லை

அவர்கள் ஆரம்பத்தில் அவர் மீது சற்று பற்றின்றி வெறுப்பு, ஏமாற்றம் மற்றும் அவநம்பிக்கையுடன் இருந்தனர்



பின்னர் அவர்களே போதி மரத்தின் கீழ் அமர்ந்து அவர் உணர்ந்ததின் உள்ளடக்கத்தை கேட்ட முதல் சீடர்கள் ஆனர்

அவரது முதல் போதனை தர்மா என்று பின்னர் அழைக்கப்பட்டது. அது, முதல் முறையாக புத்தர் இவ்வுலகிற்கு கொடுத்த ஒரு செய்தியாகும். அதுவே சுழலும் தர்ம சக்கரம் என்று பிற்காலத்தில் அழைக்கப்பட்டது




அவர் எந்த ஒரு சமய மரபயும்,
நம்பிக்கையையும்
பரப்பவில்லை


அதற்கு பதிலாக, அவர் தன்னுடைய சொந்த மனதின்
அனுபவத்தையே மற்றவர்களிடம்
பகிர்ந்துக்கொண்டார்
அவர் கைவிடப்பட்ட உணர்ச்சிவயபடுவோர் மற்றும்
துறவிகளை பற்றி நன்கு அறிவார். எனவே
அப்படிபட்டோரை தனது சத்தியத்திலிருந்து விலக்கினார்


நான் ஒரு புதிய வழியை
கண்டுபிடித்துள்ளேன், அது சந்நியாச துறவற
பாதை அல்ல, அது உணர்ச்சிவயபடுவோரின்
பாதையும் அல்ல. அது இடைபட்டப் பாதை
அனைத்தும் சமநிலையில் இருக்க
வேண்டும். எனவே, இதை தாங்கள் அறிந்ததே.
இடைபட்டப் பாதை எப்போதும் சமநிலைப்படுத்தபட்ட
ஒன்றாகும். நல்லவையின் உச்சம் ஒரு புறம்,
தீயவையின் உச்சம் மறுபுறம் என்று இரு வெவ்வேறு
எதிர்மறைக் காரணிகளின் இடைப்பட்ட சமநிலைப்
பாதையே, இடைபட்டப் பாதையாகும்






ஞான அறிவொளிக்கான பாதை, இடைபட்டப்
பாதையில் தான் உள்ளது. புத்தர் கற்பிக்க சீடத்
துறவிகள் கேட்டனர்

புத்தர் தனது ஆறு ஆண்டுக்கால துன்பத்தின் ஆய்வை, "நான்கு உன்னத உண்மைகளின்" மூலம் வெளிப்படுத்தினார்



1. துக்கம் - அதிருப்தி அகியவை உடல் மற்றும் மன துன்பமாகும், அதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்

2. அளவுக்கு அதிகமாக சேர்த்துக்கொள்வதே துன்பத்திற்கு காரணம், அதை நாம் தவிர்க்க வேண்டும்

3. எல்லவற்றின் முடிவே துன்பத்தின் முடிவுவாகும், அதை நாம் பண்படுத்திக்கொள்ள வேண்டும்

4. துன்பத்தை முடிவுக்குக் கொண்டு செல்லும் பாதை, அதை நாம் பண்படுத்த வேண்டும்




நான்கு உன்னத உண்மைகளுடன் தர்ம சக்கரம் மூன்று முறை சூழன்ற பிறகு, கொன்தன்னா, ஐந்து சீடத் துறவிகளில் முதல் சீடனாக சத்திய பார்வையை அடைந்தார். அது நீரோட்டத்தில் இறங்கிய உன்னத நிலையாகும்


விரைவில் ஒன்றன் பின் ஒன்றாக அனைத்து ஐந்து சீடத் துறவிகளும் சத்திய பார்வையை அடைந்தார்


புத்தர் அவர்களை ஆசீர்வதித்தார்


அதன் பின்னர் புத்தர் அதிகம் பேசவில்லை, அதற்கு பதில் தன்து ஐம்ப்பெரும் சீடத்துறவிகளை அவர் வென்றார்


அவர்களே அவரது முதல் சீடர்கள் ஆனர்


சாரநாத், மான் பூங்காவில் முனிவர்
ஒருவர் போதிக்கும் செய்தி விரைவிலேயே
காட்டுத் தீப் போல பரவியது


நூற்றுக்கணக்கானோர் அவரை
தேடி வந்து சீடர்களாக மாறினர்


அதில் பலர் பணக்கார வியாபாரிகள் மற்றும் அவகளது புதல்வர்கள்,
அவர்கள் கங்கை நதிக்கு அப்பால் ஐந்து மைல் தொலைவில் உள்ள வர்த்தக
மையமாமும், புனித நகரமும்மான பனாரஸில் இருந்து வந்திருந்தனர்
இன்று பனாரஸ் இந்தியாவில், அனைத்திலும்
மிகமுக்கிய புனித ஸ்தலமாகுமாகும்





சாதிகளுக்கு அப்பாற்பட்டவர் புத்தர், எனவே பிரபஞ்சத்தை பாதுகாக்க செய்யும் ஆசாரிய சாஸ்த்திரச் சடங்குகளுக்கும் புறமானவர்
அவருடைய போதனை நம்முள் பிரபஞ்சம் என்பதேயாகும்



நீங்கள் எந்த சாதியை சேர்ந்தவராகவும் இருக்களாம், ஆனால் நீங்கள் உன்னதமானவர் என்பது, தங்களின் உண்மையை அறியும் திறன், நன்னடத்தை மூலமே வெளிபடும். நீங்கள் அதில் திறமையனவர் என்றால் நீங்கள் உன்னதமானவர்களே







புத்தர் அவரது பாதையை கண்டுபிடிக்கவே பற்பல ஆண்டுகள் ஆனது. ஆனால் அத்தகைய கடினத்தை அவர் தனது மக்களுக்குக் கொடுக்க விரும்பவில்லை, அதனால் அவர் எல்லோரும் ஒருவருக்கொருவர் உதவி ஒன்றாக வாழ ஒரு சமூகத்தை நிறுவனார்

நான் புத்தரிடம் அடைக்கலம் செல்ல போகிறேன், நான் தர்ம பாதையில் சென்று, நான் சங்காவின் உறுபினராகப் போகிறேன்

ஒரு விழாவின் மூலம் மக்கள் தங்கள் குடும்பங்களையும் வீடுகளையும் விட்டு, புத்தரின் ஆன்மீக பயணதை மேற்க்கொள்கின்றனர். அனைத்து வயது துறவிகளும் உணர்ச்சிமயத்தோடு சங்காவில் இணைகின்றனர்

சங்கா, புத்தரின் அனுபவம் மற்றும் ஞானத்தின் ஒரு மறுவுருவமாக உள்ளது

புத்தர் அவர்களை தனது போதனை மற்றும் கற்பித்தலின் நல் உதாரணங்கலாக்க விழைந்தார். அவரது உயிரோடம்முள்ள போதனைகள், நடக்கத்தக்கதாகவும், பேசத்தக்கதாகவும், சிரிக்கத்தக்கதாகவும் இருந்தன

எனவே சங்கா, புத்தரின் போதனைகளின் வாழும் உதாரணமாகும்

முதலில் சங்கா ஒரு அடிப்படை அமைபாகவே விளங்கியது, அதில் ஆண், பெண் என்ற பாகுபாடின்றி அனைத்து சாதி மக்களும் இணையலாம்





அக்காலத்தில் பெரும்பாலான பெண்களுக்கு வாழ்க்கை மிகவும் கடினமாகவே இருந்தது. சங்காவில் இணைவது, அவர்களுக்கு ஒரு விடுதலை உணர்வைப் பெற்றுத்தாந்தது. அன்றில்லிருந்து அவர்கள் தாங்களின் ஒவ்வொரு தருணத்தையும் அனுபவித்து மகிழ்ந்து பரவசப்பட்டனர்



பல நேரங்களில், நமது மனம் போதுமான அளவிற்கு அமைதியாக இருபதில்லை. எனவே நாம் நமது மனதை நன்றாக புரிந்துக் கொள்ள வேண்டும், அதன் மூலம் மனதின் உணர்ச்சியை சமப்படுத்தி, மகிழ்ச்சியைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். சிரமங்கள், துன்பங்கள் நம்முள் இருந்து வரும் ஒன்றேயாகும்



மனம் அமைதியற்ற ஒரு குரங்கை போன்றது. யார் நீங்கள் என உங்களிக்குள்ளே தொடர்ந்து சிந்தித்து பாருங்கள், அது ஒரு ஆற்றை போல நிமிடத்துக்கு நிமிடம் மாறிக் கொண்டே இருக்கும்..., இன்று ஒன்றாக, நாளை மற்றொன்றாக அது காட்சியளிக்கும். ஒரு கணம் நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள், அடுத்த மறுகணம் மகிழ்ச்சியாக சிரிக்கிறீர்கள். நீங்கள் யார்?



புத்தர் போதித்தது, நாம் நம்முள்ளே சென்று சமாதானத்தை பெறுவது எப்படியென்றே


புத்தரின் இரக்கமும் கருணையும் தனது சீடத்துறவிகளை வெளிச் சமுகத்திற்கு அனுப்ப துண்டியது


அவர்கள் சத்திய நெறி மற்றும் வறுமையை பின்பற்றி, தெருக்களின் திறிந்து இவ்வுலகிற்கு புத்தரின் போதனைகள் பரப்பினர்


செல்லுங்கள் என் சீடத்துறவிகளே, பலரின் மகிழ்ச்சிக்காக, உலகக்கருணை மற்றும் இரக்கத்திற்காக போங்கள். மக்களின் கண்களிலுள்ள சில அழுக்கு திரையை விலக்க என் போதனைகளை கூறுங்கள், கேட்காதோர் சாதாரண மனிதனாகவே மடியட்டும். ஆனால் அந்த போதனையைக் கேட்போர், சுத்ந்திர காற்றைச் சுவாசித்து மகிழ்ச்சி விடுதலையைப் பெறுவர்


அனைத்து சீடத்துறவிகளும் யாசகம் பெற்றே வழ்ந்தனர்


பலரும் யாசகம் பெறுவது ஒரு கெட்ட விஷயம் என்ன எண்ணுகின்றனர், ஆனால் உண்மையிலேயே அது பாரம்பரிய ஆன்மீக தூய்மையை வெளிப்படுத்தும் ஒரு செயலாகும்
பெற்றுக்கொண்ட உணவுக்கு ஈடாக, அவர்கள் தங்களின் போதனை உரையை கேட்போர் திருப்தி அடையும் வரை போதிப்பர்


புத்தரின் போதனைகள் அனைவருக்கும் பொதுவானது


இவ்வுலகில் மூன்று விஷத்தன்மைகள் உள்ளன் அவை, பேராசை, கோபம் மற்றும் அறியாமை. அவைகள் கண்கள், மூக்கு, காதுகள், வாய், உடல் மற்றும் மனதில் ஆசை தீயை உண்டக்குக்கிறன. அவற்றிடம் இருந்து விடுபடும் வழி அம்மூன்று விஷத்தன்மைகளையும் மறுப்பது ஆல்ல, அவற்றை அதன் எதிர் தன்மைகளாக மாற்றுவதே ஆகும்


பேராசைக்கு மாறாக பெருந்தன்மை, கோபத்திற்கு மாறாக இரக்கம் மற்றும் கருணை, அறியாமைக்கு பதிலாக ஞானத்தையும் உண்டாக்க வேண்டும்




எல்லாவற்றிற்கும் மேலாக, புத்தர் இயல்பானவர்
அவர் தனது சீடர்களிடன் கூறுவனவற்றை எல்லாம் பின்பற்ற வேண்டும் என்று நினைக்கமாட்டார், மாறாக அவகளை விவாதிக்கவைத்து, வாதிட்டு, சவால்விடவைத்து


என்னிடமுள்ள பக்திப்பற்றினால் எனது சீடர்கள் எனது போதனையை ஏற்றுக்கொண்டு பின்பற்ற மாட்டார்கள் மாறாக அவர்கள் தங்களின் சுய அனுபவத்தின் மூலமுலமே அறிந்துக்கொள்வர்


ஏனெனில் புத்தரே தான் தன் இறுதி ஞான அறிவொளியை பெறுவதற்கு, செயலாக்கத்தக்க தேடலை அடைய கடின உழைப்பும், அடிப்படை காரணங்களும் தேவைப்பட்டன
சில சமயம், புத்தரின் சில சொந்த வார்த்தைகள், ஏற்றுக்கொள்ளத்தக்கதில்லாமால் முரண்பாடுடன் இருந்தால், அவற்றை நிராகரிக்கும் உரிமையும் நமக்கு உண்டு


புத்தரை இன்னும் பின்பற்றுவோர் அதிகரித்துக்கொண்டே செல்ல, அவரது கதைகளும், அற்புதங்களும், அடையாளங்களும் கற்பனையுடன் கலந்து இவ்வுலகெங்கும் பரவியது


வன்முறை, எப்போதும் மேலும் வன்முறைக்கே வழிவகுக்கும். கொலைசெய்தவன் ஒரு நாள் கொலைப்படுவான். வெற்றிவீரன் ஒரு நாள் வேறொருவனால் வெல்லப்படுவான். சுரண்டியவன் மற்றொருவனால் சூறையாடப்படுவான்
மாற்றம் என்பது நம்முள் இருந்து வர வேண்டிய ஒன்றாகும்
புத்த மதம் உண்மை சம்பவங்களுடன் என்றும் வாக்குவாதம் செய்ததில்லை


பல ஆண்டுகளாக, புத்தர் இந்தியாவின் வடகிழக்கு பகுதி முழுவதும் தனது போதனைகளை பரப்பினார்
அனைத்து உயிரினங்களும் சந்தோஷமாக இருக்கட்டும். வலுவானதோ வலுவாற்றதோ, பெரியதோ சிறியதோ, அனைத்து உயிரினங்களும் ஒரு தாய் வயிற்றின் குழந்தைகளாக நெஞ்சார மகிழ்வுற்று இன்பமாக இருக்கட்டும்


வெறுங்கால், அங்கியுடன் அவர், சாலையின் ஓரமாக நடந்துக்கொண்டிருந்தார். அப்போது அவருக்கு வயது 80, முதுமை அவர்மேல் காணப்பட்டது


அவரின் முதுகு வலித்தது. அவரது வயிற்றிலிம் வலி பெரும்பாலும் இருந்தது


நான் முதுமையை அடைந்துவிட்டேன், பழைய பாழடைந்த ஒரு வண்டியைப் போல தோய்ந்துவிட்டேன்


இவ்வுலகம் மிகவும் இனிமையானது, குறைந்தது இன்னொரு நூற்றாண்டு வாழ விரும்புகிறேன்
ஆனால் அவர் வலுவிழந்து, இயக்கம் தீர்ந்து காணப்பட்டார்


குஷிநகர், நேபாலின் எல்லை அருகே உள்ள ஒரு சிறிய கிராமம். அதன் அருகே புத்தர் நோய்வாய்ப்பட்டார்


அங்கே அவருக்கு உணவு அளிக்கப்பட்டது, அது கெட்டுப்போய், கொடிய தன்மையுடன் இருந்தது. அதனை அறிந்திருந்தும் அவர் அதை உட்கொண்டார்
அது மோசமாக இருந்தது. இருந்தும் அதனை அளித்தவர் மனம் புண்படக் கூடாதென்று அதை உட்கொண்டார். ஏனெனில் அது அவரின் முடிவிற்க்கான நேரம் என்று நன்கு உணர்ந்திருந்தார்


அவரது சீடர்கள் பலர் குஷிநகரை வந்தடைந்தனர்


அவர் வலுவிழந்திருந்தார். அத்தோப்பில் உயர்ந்த அமைதியான சால் மரங்களுக்கு பக்கத்தில் தன்னை படுக்கவைக்கச் சொன்னார்




அவர் மரண தருவாயில் இருந்த போது, அவருடைய சீடர்கள் துக்கத்தால் வாடி கண்ணீர் விட்டு அழத்தொடங்கினர்


நான் உங்களுக்கு ஒன்றை உறுதிப்படுத்திக்கொள்கிறேன், இவ்வுலகில் பிறந்த அனைத்தும் மாண்டாக வேண்டும், அதுவே இயற்கையின் நியதியாகும்


இந்நேரத்தை சரியாக பயன்படுத்திக்கொள்ளுங்கள், தங்களின் ஆற்றலை இவ்வுலகில் பயன்படுத்தி, தங்களின் சொந்த ஞான அறிவொளி எழுச்சியை அடைய முயலுங்கள்


அவர் தனது இறப்பின் தருவாய் சோகத்தையும், அவரது சீடர்களின் உண்மையான பணியை நினைவுப்படுத்த பயன்படுத்தினார்
அவர் உண்மையில் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்றால், அவருக்கு நெருக்கமானவர்களை தன்பால் அழைக்கிறார்


சுப்ஹத்தாவே புத்தர் வாழ்நாளில் அராஹத், சத்திய பார்வையை அடைந்த கடைசி சீடர் ஆவார்


புத்தர் எப்போதும் விடைப்பெற்றுக்கொள்கிறேன் என்று கூறுவது வழக்கம். ஆனால் இப்போது அவர் இப்புவியை விட்டு நிரந்தரமாக விடைப்பெற்றுக்கொள்ள தயாரானார்


மரணத்தின் விளிம்பில் இருந்த போது, அவர் தன்னுடைய பிறப்பு நிலையிலிருந்து அத்தருண முதுமை நிலை வரை அனைத்தையும் நினைவுக்கூர்ந்தார்







நான் சென்ற பிறகு, உங்களின் சிலர் நமக்கு ஆசான் இல்லையே என்று நினைப்பீர்கள், ஆனால் அதை நீங்கள் அப்படி பார்க்க கூடாது. நான் போதித்த தர்மா மற்றும் கற்பித்த ஒழுக்க நெறிப்பாதையே உங்களுக்கு ஆசானாக விளங்கும். அனைவரும் தங்களது எல்லா தனிப்பட்ட விஷயங்களையும் ஒழிந்து, சலிப்பின்றி அதனை பின்பற்றி வாழ வேண்டும். இவ்வுலகிலுள்ள அனைத்தும் நம்மைக் கடந்து செல்லும், தளராது நிலையாகப் போராடுங்கள்
அதுவே புத்தரின் கடைசி வார்த்தைகள்
புத்தர் சமாதானத்துடன் நிம்மதியாக மரணத்தைத்தழுவினார். அவர் மீண்டும் பிறக்கவோ, மீண்டும் இறக்கவோ மாட்டார்





அவரது தலை வடக்கை நோக்கியும், முகம் மேற்கே நோக்கியும் இருந்தது

பூமி அதிர்ந்து, மரங்கள் திடீரென்று தங்கள் இதழ்களை உதிர்த்தன. மலர்கள் மலர்ந்து பெருமதிப்புடன் அவர் உடல் மேல் மெதுவாக விழுந்தன

தெய்விக பவள மலர்கள் மற்றும் தெய்விக சந்தன பொடிகள், பக்தியின் அறிகுறியாக புத்தரின் உடலில் மேல் விழுந்தன



அவருடைய சீடர்கள் அவர்களது ஆசான் இல்லாமல் என்ன செய்ய போகிறோம் என்ற வருத்தத்தில் திகைத்தனர். ஆனால் விரைவிலேயை, புத்தர் சொன்ன எளிய வார்த்தைகள் அவர்கள் நினைவிற்கும் வந்தது: "நான் உங்களின் ஞான அறிவொளி அல்ல. நான் உங்களை கட்டுப்படுத்தி ஆள்பவனும் அல்லன். நீங்கள் ஒரு நீண்ட காலம், என்னொடுக்கூடவே பயணித்து வந்துள்ளீர்கள். இப்போது, நீங்கள் உங்கள் சொந்த ஞான அறிவொளியாக இருங்கள்"

புத்தர், மரணத்தையும் வாழ்வையும் பிரிக்க முடியாத ஒன்றாக பார்த்தார். அவை ஒரே பொருளின் இரு பக்கங்களாகும். மரணம் எப்போதும் நம்முடனே உள்ளது

மனதின் சூத்திரம், அழகான பிரார்த்தனை
எப்போதும் இதனை நீங்கள்,
உங்கள் மனதில் வைத்துகொள்ளுங்கள்
வடிவம் வெறுமையாக உள்ளது.
வெறுமையை வடிவமாக உள்ளது
கண், காது, மூக்கு, நாக்கு, உடல், மனம் எதுவும் இல்லை
வண்ணம், ஒலி, மணம், சுவை, தொடுவுணர்வு, இருக்கும் விஷயம்
அது எதுவும் இல்லை
நீங்களும் இல்லை! நானும் இல்லை!
மரணம் இல்லை மற்றும் எந்த பயமும் இல்லை!
மரண முதுமையும் இல்லை!
மரண முதுமைக்கு முடிவும் இல்லை! துன்பம் இல்லை!
துன்பத்திற்கு "காரணம்" இல்லை... அதற்கு "முடிவும்" இல்லை...
பாதை எதுவும் இல்லை. ஞானமும் இல்லை. மற்றும்
எந்த ஆதாயமும் இல்லை
ஆதாயம் இல்லை. இவ்வாறு ஞான அறிவொளியடைந்தோர் மனதில்
எந்த தடைகளும் இல்லை என்ற எண்ணத்தோடுச் சரியாக
வாழ்கையை அறிந்து வாழ்ந்தனர்
தடைகள் இல்லை, எனவே, எதற்கும் பயமும் இல்லை
ஏமாற்றப்பட்டுவிட்டாயோ என்ற எண்ணத்திற்கு அப்பார்பட்டது இது
- இதுவே "நிர்வாணா" ஆகும்

